"நீங்கள் போய்த்தானாகவேண்டுமானால், சமுத்திரக் கரையை அடையும்வரை தகுந்த சௌகரியங்களும் பாதுகாப்பும் அளிக்கிறேன் உங்கள் பல்லக்கை ராஜ பட்டக் குதிரைகள் இழுத்துச் செல்லும்" என்றார் லூயிமன்னர்.

இது எவ்வளவு மாபெரும் கௌரவம் என்பதை நீங்கள் கற்பனை செய்து பார்க்கலாம்!

பெஞ்சமின் தாயகத்துக்குப் புறப்பட்டபோது அரசாங்கக் குதிரைகள் இழுத்துவரும் பல்லக்கோடு வண்டிகளின் மாபெரும் ஓர் ஊர்வலமே கிளம்பியது. அந்த வண்டிகளில் பெஞ்சமினின் நண்பர்கள் டஜன்கள் கணக்கில் பாரீஸ் நகரத்தின் மாபெரும் வடகோடி கோட்டை வாசல்வரை சவாரி செய்தனர். அந்த வாசலை அடைந்ததும் ஒன்பது வருஷங்கள் அவரைத் தங்கள் விருந்தாளியாக வைத்திருந்த சௌமான்ட் பிரபுவும் அவருடைய பெண்ணும் திரும்பிவர முடியவில்லை. அதனால் அவர்கள் நெடுந் தூரம் சமுத்திரக்கரைவரை பிராங்ளினைப் பின்தொடர்ந்து வந்தார்கள்.

ஊர்வலம் மிகவும் மெதுவாகத்தான் முன்னேறியது. ஏனெனில் ஒவ்வொரு குக்கிராமத்திலும், நகரத்திலும் நிறுவப் பட்டிருந்த வரவேற்புக் குழுக்கள் (Welcoming Comittees) வெளிப்போந்து குதிரைகளை வழிமறித்து நிறுத்தின. அப்போது அங்கே யெல்லாம் கண்ணீர் துளிகள் உதிர்ந்தன. பிரசங்கங்கள் நடந்தன, பெரிய பெரிய ரோஜாப் பூச் செண்டுகளும் சின்னஞ் சிறு பரிசுப் பொருள்களும், குழந்தைகளால் அவருடைய கையிலே திணிக்கப்பட்டன. வயதாகியும், நோயவாய்ப்பட்டும், உடலெங்கும் வலியும் அசதியும் மயமான பிராங்ளின் அவ்வளவையும் ஆண்மையுடன் பொறுத்துக்கொண்டார். பல்லக்கு மெல்ல அசையும் போக்கு, அவருக்குப் பெரும் வாதனையை உண்டாக்கியது. ஆனாலும் அவர் புன்முறுவல் பூத்தபடியே ஆங்காங்கே பல்லக்குப் பீடத்திலிருந்து கீழிறங்கி தம்மை நோக்கி நீட்டிய கைகளைப் பிடித்துக் குலுக்கி, அவர்கள் கூறியதை யெல்லாம் கவனமாகக் கேட்டுவந்தார்.

பிரெஞ்சுப் பிரமுகர் ஒருவர் நடுவழியில் பெஞ்சமினைத் தடுத்து நிறுத்தித் தம் மாளிகையில் ஓர் இரவு தங்கவைத்து, அவருக்கு அத்தியாவசியமான ஓய்வு அளிக்கும்படி தம் வேலை யாட்களுக்கு உத்தரவிட்டார். கடைசியாக அவர் இங்கிலீஷ் கால்வாயை அடைந்து இங்கிலாந்துக்குக் கப்பலில் பிரயாண மானார். அங்கே சில தினங்கள் தங்கியிருந்துவிட்டு, மீண்டும் ஒருமுறை அட்லாண்டிக் மகா சமுத்திரத்தைக் கடக்கும் கப்பற் பிரயாணத்தை மேற்கொண்டார்.

அவருடைய வாழ்நாளின் கடைசி வருஷங்கள் அமைதியாகக் கழிந்தன. அமெரிக்காவின் கட்சியிலிருந்து விலகி எதிர்க் கட்சியில் சேர்ந்திருந்த தம்முடைய ஒரே மகனுடன் அவருக்கு மீண்டும் சுமுகமான சமாதானம் ஏற்பட்டது. அவர் வெளிநாடுகளில் கௌரவிக்கப்பட்டது போலவே கடைசி காலத்தில் சொந்த நாட்டிலும் கௌரவிக்கப்பட்டார். அவர் பென்ஸில்வேனியா காமன்வெல்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பிறபாடு மீண்டும் மூன்று முறைகள் அவர் தேர்ந்தெடுக்கப் பட்டார். (அமெரிக்க) ஐக்கிய நாடுகளின் அரசியல் அமைப்புச் சாசனத்தைத் தயாரிப்பதற்காக நியமிக்கப்பட்ட சமமேளனத்தில் ஓர் பிரதிநிதியாகவும் அவர் நியமிக்கப்பட்டார். அந்தச் சாசனத்தைத் தயாரிப்பதிலே அவர் முக்கிய அங்கம் வகித்தார். அந்த அரசியலமைப்புச் சாசனத்தின் பிரகாரந்தான் நாம் இப்போது வாழ்ந்து வருகிறோம்.

இந்த வருஷங்களுக்கிடையே பெஞ்சமின் தம் மகள் ஸாலி பாச்சியோடும், அவளது கணவனோடும் அவளது குடும்பத்தோடும் வசித்து வந்தார். எல்லாவற்றிற்கும் மேலாக, அவருடைய நண்பர்கள்—பழையவர்களும் புதியவர்களும்—அவரைப் புடை சூழ்ந்து கொண்டு கூட்டுறவு அளித்து வந்தனர். கடைசிக் காலத்தில் அவருக்கு ஏற்பட்ட உத்வேகமான முயற்சிகளில் இந்தப் பூலோகத்தை விட்டே அடிமை முறையை ஒழித்து விடுவதும் ஒன்றாகும்.

இந்த விஷயத்தில் அன்றைய காலப் போக்குக்குப் பெரிதும் முற்போக்கானவராகி விட்டார். ஏனெனில், அவருடைய காலத்தில், சுமார் ஒரு நூற்றாண்டுக்குப் பிற்பாடுகூட அடிமை வழக்கமானது சகஜமாக இருந்து வந்திருக்கிறது.

அவர் மிகவும் வயதாகி படு கிழவராய் இருந்த போதிலும் தம் அலுவல்களைக் கவனிப்பதை அவர் நிறுத்தவில்லை. எப்போதும் சுறுசுறுப்பாயிருக்க வேண்டுமென்ற தீர்மானத்தின் பிரகாரம், தம்முடைய சந்துவாத நோயையும் பொருட்படுத்தாமல் அவர் நடமாடியதன் காரணமாக அவர் ஒரு சமயம் மாடிப் படிகளிலிருந்து கீழே விழ நேர்ந்தது. அதிலிருந்து அவர் உடல் நலம் தேறுவதற்கு மிகவும் காலதாமதமாயிற்று. 1790ம் வருஷம் ஏப்ரல் மாதம் 17-ம் தேதி ஒரு சிறு காய்ச்சலுக்குப் பிறகு, அவர் காலமானார். நாகரிக உலகம் முழுவதுமே துக்கத்தில் ஆழ்ந்தது. முரசுகள் மந்தமாக ஒலித்தன. தேசக் கொடிகள் பாதி இறக்கப்பட்டு பாதி மூடுபனியால் தோய்ந்து பறந்தன. ஈமச் சடங்குகளுக்கான மரியாதைக் குண்டுகள், எங்கெல்லாம் மனிதர்கள் ஒன்றுகூடி நின்றிருந்தனரோ அங்கெல்லாம், முழங்கின. பிரெஞ்சு சட்டசபையானது பெஞ்சமினின்

பழைய நண்பரான மிரபோவினுல் பெஞ்சமின் மரணத்தைப் பிரஸ்தாபித்துக் கொண்டுவந்த தீர்மானத்தின் பேரிலும், அதை மார்க்விஸ் டி லாபயட்டி ஆமோதித்ததின் பேரிலும், மூன்று நாள் இழவுத் துக்கம் கொண்டாட வேண்டுமென்ப் பிரகடனம் செய்தது. அதுவரையில் சட்டசபைச் சம்பிரதாயம் அனேகமாகக் கேள்விப்பட்டேயிராத விஷயம் அது!

பிராங்ளின் சவப் பெட்டியின் பின்னுல் பிலடெல்பியா நகரத்திலுள்ள மாபெரும் பிரமுகர்கள் அனைவரும் நடந்து சென்றனர்.

அவர்களை இருபதினுயிரம் பேர்கள் துக்கம் கொண்டாடிப் பின்தொடர்ந்து வந்தார்கள். பிலடெல்பியா பட்டினத்திலே அதுவரை அவ்வளவு பெரிய கூட்டம் எப்போதுமே கூடியதில்லை. அப்போது வாழ்ந்த மாபெரும் எழுத்தாளர்கள் அனைவரும் சரம ஸ்லோகங்கள் எழுதினார்கள். மாபெரும் பேச்சாளிகளெல்லாம் பொதுக்கூட்டங்களில் பிரசங்கமாரி பொழிந்தனர். சாதாரண ஆட்களோ தெரு மூலைகளிலும் மதுச் சாவடிகளிலும் கூடி நின்று தங்களுக்குத் தெரிந்த சிறு சிறு புகழ்மாலைகள் பாடினார். பெண்களோ தெருக்களில் பகிரங்கமாக அழுது கொண்டு சென்றனர். சிறுவர்களோ திடீரென்று திசை தப்பித் தனியே விடப்பட்டவர்களாகத் தவித்தார்கள். மனிதனுடைய நண்பர் ஒருவர் இந்த உலகை விட்டுச் சென்றுவிட்டார்.

ஆனால் அத்தகைய மனிதன் ஒருபோதும் நிஜமாக இறந்து விடுவதில்லை. ஏனெனில் அவனுடைய செயல்களும், வார்த்தைகளும் அவனுக்குப் பிறகும் வாழ்ந்து வருகின்றன. பெஞ்சமின் பிராங்ளின் என்ன சொன்னார் அல்லது என்ன செய்தார் அல்லது என்ன நினைத்தார் என்று யாராவது ஒருவர் நினைக்காத நேரம் கணப்பொழுதுகூட இல்லை என்று சொல்லலாம். அவ்விதம் மற்றவர் ஒருவரைப் பற்றி நினைக்கும் தோறும் உயிர் வாழ்வதாகவே கருதவேண்டும். அவர் சிந்தித்து, கண்டறிந்து, கண்டுபிடித்து, கற்றறிந்த விஷயங்களாலேதான் இன்று நம் ஞானம் பெரிதும் விருத்தியடைந்திருக்கிறது. அதேபோல் அவர் செய்த காரியங்களால்தான் நாம் சிறப்பான வாழ்வு பெற்றிருக்கிறோம்.

## 12 அமெரிக்கா

பிறந்த நாட்டிற்காகப் பெஞ்சமின் செய்த காரியங்கள் அனைத்தையும் சொல்வதென்ருல், இதைவிடப் பெரிய புத்தகமாகிவிடும். அவர் மட்டும் வாழ்ந்திராவிட்டால், இன்று ஐக்கிய அமெரிக்கா உலகினிலே வகிக்கும் அதி முக்கியமான ஸ்தானத்தை அது கைக்கொள்ள முடியாதிருந்திருக்கலாம்.

அவருடைய வாழக்கை ஏடு முழுவதுமே அரும பெரும காரிய சாதனைகளின் ஓா பட்டியலாகும அவறறுள பெருமபா லானவை தம சொநத நாட்டின் முன்னேறறததை நோககிச் செலுததபபட்டன

இதோ, பெஞசமின பிராஙகளின் சாதிதத காரியஙகளில சில:

அவா, அமெரிககாவில காகித நாணய முறையை வறபுறுததிக கூறி, வாதாடி, வியாபாரம வளர உதவினா

சநதா முறையில புததகஙகளைச சுறறவிடும முதலாவது வாசகசாலையை அவாதான் அமெரிககாவில ஸதாபிததாா

பிலடெலபியா நகரில நெருபபணைககும தொண்டாபடையை அவாதான முதன் முதலில உருவாக்கினா

பெனஸிலவேனியா நகரில உளள முதலாவது வைததிய சாலையின ஸதாபகாகளில அவரும ஒருவராவாா

அவா போஸட மாஸடராகி, தபால முறையைத திருததி யமைதது, அது தாறகைவே திறமபட இயஙகும வகையில திட்டப படுததினா தறகாலததிய தபால இலாகாத திட்டததிறகு அவருடைய கருததுகளதாம அடிபபடையாகும

அமெரிககத தததுவஞான சஙகததை அவாதான் துவககி வைததாா அது இனறளவும நடைமுறையில இருநது வருகிறது.

கறகள பாவி தெருககள அமைப்பதை அவாதான முதன் முதலில புகுததினா தெருககளைச சுததம செய்யும திட்டம ஒன்றையும அவாதான் நிலைநாட்டினா

தெருககளுககு விளககு ஏறறும முறையை அவாதான் நிலைநிறுததினா

உளநாட்டுப பாதுகாபபை வறபுறுததிககூறி, பென்ஸில வேனியா குடிப படையை அவாதான் ஸதாபிததாா

பிராஙளின்தான் முதன் முதலாக, பதின்மூனறு மூல குடியேறற நாடுகளின் ஐககியததைப பறறிச சிநதிததவா, அது பறறி ஒரு கட்டுரையும எழுதியவா

பிராஙளின் ஸடவ எனற கூட்டுபபை அவா கண்டு பிடித்தாா அதுதான கூடேறறும கருவி முறைகளின வளாச சிக்கு வழி நடததியது

முதலாவது மின்சாரப பாட்டரியை அவாதான் நிாமாணித தாா மின்சார வேகததில, பாஸிடிவ நெகடிவ என்னும

இரண்டு ரக ஓட்டஙகள இருககின்றன என்று குறிப்பிட்டுக் காட்டி மின்சாரததிறகு ஒரு புதிய கோடபாட்டை வகுததவா அவாதான் பாஸிடிவ நெகடிவ எனற கலைச சொறகள இனறளவும உபயோகபபடுததபபட்டு வருகின்றன

மின்சாரமும மினனலும ஒன்றுதான் என்பதை அவா நிரூபிததுக காட்டினா

இடி மினனலின் அபாயகரமான விளைவுகளைத தவிாபப தறகு ஒரு சாதனமாக இடிதாஙகியை அவாதான கண்டு பிடிததாா அது, எததனையோ கோடிககணககான டாலா மதிபபுளள சொததுககளையும பல உயிாகளையும காபபாறறி யிருககலாம. இடிதாஙகிகள இனறளவும உபயோகததிலிருநது வருகின்றன

பென்ஸிலவேனியா சட்டசபையில அவா பதினைநது வருஷஙகள பணியாறறியிருக்கிறா. அதன அதிசெலவாகுளள அஙகததினராகவும விளஙகியுளளாா

அமெரிககாவிலே முதன முதலாக வெளியான நாவலை அவாதான பிரசுரிததாா — அது, சாமுயெல ரிசசாட்ஸன எனபவா எழுதிய பாமீளா எனனும நாவலாகும

அககாலததிய அதி முககியமான செயதிப பததிரிகையாக விளஙகிய பெனஸிலவேனியா கெஜட்டை அவாதான சொநத மாக நடததிப பிரசுரிதது வநதாா—அதுதான இனறுளள சாட்டாடே ஈவினிங போஸட (சனி மாலைத தபால) எனனும சஞ்சிகைககு மூதாதையாகும

பிறகாலததில பென்ஸிலவேனியா சாவகலாசாலை என்று பெயா பெறற பெனஸிலவேனியா கலைககழகததை (Academy of Pennsylvania) அவாதான ஸதாபிததாா

பெரியமமை நோய் வராமல தடுபபதறகு அமமை குததிக் கொளளும முறையை—அது பொது உபயோகததிறகு வருவ தறகுப பல வருஷஙகள முனபாகவே-அவாதான வறபுறுததினா. சாமானிய ஜலதோஷம பறறி அவா அறிவுறுததிய கொளகை களே இன்றளவும சரியானவை எனக் கருதபபட்டு வருகின்றன.

புரட்சிககு முன்னதான துயர வருஷஙகளிலே அவா குடியேறற நாட்டின் பிரதிநிதியாக இஙகிலாநதில வேலை பாாதது வநதாா அநதச் சமயததிலகூட ஸடாமபு சட்டத்தை நீக்கிவிடுமபடி செய்ய அவரால முடிநதது இது கைகூடுவதற் காக, தம சொநத நாட்டின் நலனை உததேசிதது, தமமுடைய

உயர்ந்த பதவியையும் பிரகாசமான உத்தியோக முன்னேற்றத்தையும் அவர் தியாகம் செய்தார்

சுதந்திரப் பிரகடனத்தைத் தயாரிக்கவும் திருத்தி ஒழுங்குபடுத்தவும் அவர் துணை புரிந்தார்

ஐக்கியநாடுகளின் அரசியல் அமைப்புச் சட்டத்தை எழுதவும், அதனை நிறைவேற்றவும் அவர் துணை புரிந்தார் அந்த அரசியல் அமைப்பின்கீழ்தான் நாம் தொடர்ந்து வாழ்ந்து வருகிறோம்

பிரான்ஸ் தேசத்தில் குடியேற்ற நாடுகளின் கமிஷனராக அவர் பணியாற்றி வருகையிலே, அமெரிக்க இராணுவத்திற்குத் தேவையான பணம், ஆயுதங்கள், வெடி மருந்துகள், உணவுப் பண்டங்கள் முதலானவற்றைப் பெற்றார்

அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கு அதிகம் பணத்தேவை ஏற்பட்ட சமயத்திலே, பிரெஞ்சு அரசாங்கத்திடமிருந்து ஒரு கணிசமான தொகை கடன் வாங்கிக் கொடுத்தார்

போராட்டத்தின் முடிவில் இங்கிலாந்திற்கும் ஐக்கிய நாடுகளுக்குமிடையே அவர்தான் சமாதான உடன்படிக்கை பேசினார்

அடிமை முறையை ஒழித்துவிட அவர் வாதாடி, அந்த விஷயம் பற்றித் துண்டுப் பிரசுரங்களும் வெளியிட்டார்

பெஞ்சமின் பிராங்ளின் தம் நாட்டிற்காகச் செய்த மிகவும் புகழ்பெற்ற அருஞ்சாதனைகள் நாம் இங்கே இன்னும் அவருடைய சுறுசுறுப்பான வாழ்வின் நீண்ட வருஷங்களுக்கிடையே அவர் சாதித்த காரியங்கள் எத்தனையோ எவருக்கும் தெரியாது தேச சேவையின் அழைப்பை ஏற்க முடியாத அளவிற்குத் தமக்கு அதிக வேலை இருக்கிறதென்றோ, தாம் அவ்வளவு தூரம் முக்கியஸ்தர் என்றோ, அவர் கருதியதே இல்லை தம் கடமையை நிறைவேற்றுவதிலே, தம்முடைய அந்தஸ்தையும் செல்வத்தையும் ஆரோக்கியத்தையும், சொந்த இன்பத்தையுங்கூட அவர் தியாகம் செய்யத் தயங்கியதே இல்லை, அவ்வளவு தூரம் கௌரவம் பாராட்டிக்கொண்டதுமில்லை

அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் பக்கம் சேர்வதற்காக அவர் தம்முடைய நண்பர்களையும் குடும்பத்தையுங்கூடப் புறக்கணித்துவிட்டார் யுத்தத்தின் மத்தியிலே பிரான்ஸ் தேசத்திற்கு ரிப்ரைசல் (Reprisal) கப்பலில் செல்லத் தம் உயிரைக் கூடப் பணயம் வைக்கத் துணிந்தார் சுதேசக் காங்கிரசுக்குத் தம்முடைய சொந்தப் பணத்தைத் தர முன்வந்து, அதற்குத் தேவைப்பட்ட காலம்வரை கடனும் பணமும்

கொடுதது வநதார தம வாழநாளின் கடைசி முடிவுவரை அதறகாகவே தம நேரம முழுவதையும செலவழிததார உணமையில, அவா தாம நேசிககும நாடடிறகுத தேவையான எதையும தமமிடமே ஒளிதது வைததுக கொளளவிலலை அவருடைய மாபெரும இதயததிலே அமெரிககாதான் எழுதப் படடிருநதது

எஙகெலலாம நமமுடைய கொடி, தன் நடசததிரஙகளை குலுஙகச செயகிறதோ, அஙகெலலாம பெஞசமின பிராஙகளி னுககு நாம நனறி செலுததக கடமைபபடடிருககிறோம. ஏனெனில அதை உருவாககுவதறகு அவருடைய இலடசியக் கனவுகளும சாதனைகளுமே பெரிதும உதவின அவா அமெ ரிகக மண பூமியை நேசிததார எனறால, அதைப பிருமமாணட மாககிய அதன ஜீவ உதவேகததைததான அதிகம நேசிததார. நினைவில வைததுககொளளத தகுதியான எததனையோ மாபெரும விஷயஙகளைப பறறியெலலாம அவா சொலலி யிருககிறா எனறாலும், இதைவிட முககியமானது எதையும சொலலியிருகக முடியாது எனலாம—அதாவது

“எஙகு சுதநதிரம வாழகிறதோ, அஙகேதான என தேசம இருககிறது!”



## இரண்டாவது பகுதி

# பிராங்ளினின் சிந்தனைகள்

[பெஞ்சமின் பிராங்ளின் எழுதிய சுயசரிதையிலிருந்தும் கட்டுரைகளிலிருந்தும் அவருடைய சிந்தனைகள் இப்பகுதியில் சுருக்கியும் திரட்டியும் தரப்பெறுகின்றன ]

### திரட்டு. 1

## வாழ்க்கை வெற்றிக் குரிய நல்ல பண்புகள்

### 1 தன்னடக்கம்

அசமந்தம் ஏற்படும்படி சாப்பிடாதே, போதை வெறி ஏறும்படி குடிக்காதே

### 2 மௌனம்

உனக்கோ பிறருக்கோ பயன் தரும் என்றாலொழியப் பேசாதே, அற்பமான உரையாடல்களைத் தவிர்த்துவிடு

### 3 ஒழுங்கு

உன்னுடைய சாமான்களெல்லாம் அவற்றிற்குரிய இடங்களில் ஒழுங்காய் இருக்கட்டும், உன் வேலையின் ஒவ்வொரு பகுதிக்கும் அதனதனுக்குரிய நேரத்தை ஒழுங்குபடுத்து

### 4. தீர்மானம்

நீ எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்யத் தீர்மானம் செய், நீ எதைத் தீர்மானம் செய்கிறாயோ அதைத் தவறாமல் செய்துவிடு

## 5 சிக்கனம்

உனக்கோ மற்றவர்களுக்கோ நல்லது செய்வதற்காகத் தவிர வேறெதற்கும் செலவு செய்யாதே, அதாவது எதையும் வீணுக்காதே

## 6 சுறுசுறுப்பு

நேரத்தை வீணுக்காதே, ஏதாவது உபயோகமான வற்றிலேயே உன்னுடைய எந்த நேரத்தையும் ஈடுபடுத்து, அனாவசியமான செய்கைகளை யெல்லாம் அறுத்தெறிந்துவிடு

## 7 நேர்மை

துன்புறுத்தும் எந்தப் பித்தலாட்டத்தையும் உபயோகப்படுத்தாதே! கபடு சூது இல்லாத வெள்ளை உள்ளத்துடனும் நேர்மை நியாயத்துடனுமே எதையும் சிந்தி, எதைப் பேசினாலும் அவ்வாறே பேசு

## 8 நீதி

இடையூறுகள் விளைவித்தோ, உன் கடமை தவறி எந்த விதப் பலன்களையும் கைநழுவச் செய்தோ, எவருக்கும் தவறிழைக்காதே

## 9 மிதம்

எதிலும் அளவுமீறிய போக்கைத் தவிர்த்துவிடு தேவையான அளவு சகிப்புத் தன்மையை வளர்த்துக் கொள்

## 10. சுத்தம்

உடலிலோ, ஆடைகளிலோ, பழக்க வழக்கங்களிலோ எந்த வித அசுத்தத்தையும் சகிக்காதே

## 11 சாந்தம்

சிறு விஷயங்களுக்காக மனங் குழம்பாதே, சாமானியமான விபத்துகளையும் தவிர்க்க முடியாத இடையூறுகளையும் கண்டு மனங் கலங்காதே, அமைதியாகவே இரு

## 12 கற்பு

குழந்தை பெறுவதற்கோ, உடல்நலத்திற்கோ மட்டும் அபூர்வமாக ஆண் பெண் உறவு வைத்துக்கொள், அசட்டுத்தம் ஏற்படும்படியாகவோ, உடல் பலஹீனம் ஏற்படும்படியாகவோ, உன்னுடைய அல்லது மற்றவரின் அமைதிக்கும் மானத்திற்கும் பங்கம் ஏற்படும்படியாகவோ ஆண் பெண் தொடர்பில் ஈடுபடாதே!

## 13 பணிவுப பணபு

ஏசுநாதரையும சாகரடீஸையும போல நட

[ இப பதிமூனறு பணபுகள மீதும ஒருவன ஒரே சமயததில கவனம செலுததி அபபியசிகக முடியாவிடடாலும, மேறகூறிய வரிசைக கிரமபபடி ஒவவொரு பணபையும், ஒனறனபின ஒனறாக பதிமூனறு வாரஙகளுககுள தன பழககததுககுக் கொணடுவநதுவிட முடியும எனறும, மேறபடி பணபுகளில பிசகவிலலையா எனத தினசரி தனனுடைய நடவடிககைகளைப பரிசோதிததுக கொளவது அவசியம எனவும பெஞசமின் பிராஙளின கருதினா ]

தனனடககநதான முதனமையான பணபு, அது மூளைககுத தெளிவையும குளிாசசியையும கொணடுவரத தூணடுகிறது, நிலையான ஆணமைககு இனறியமையாதது, ஆசைக கவாசசி களிலிருநது தடுததாடகொளளும பாதுகாவலனனது தனன டககப பணபு நிலைபெறறு விடடால மௌனம சுலபமானதாகி விடும தீாமானமான போககுப பழககததிறகு வநதுவிடடால எலலாப பணபுகளும கைவரபபெறும முயறசியில உறுதியாக ஈடுபட முடியும சிககனமும சுறுசுறுபபும கடனகளிலிருநது விடுதலை தேடித தநது, செலவாககையும சுதநதிரததையும உறபததி செயகிறது, நோமை நீதி முதலான பணபுகளை அபபி யசிபபதும மிகச சுலபமானதாகிவிடுகிறது

### திரட்டு–2

# கால அட்டவணை

[ குறிபபிடட நேரததில குறிபபிடட காரியததைத தான செயயவேணடும எனபதைப பழககததிறகுக கொணடுவர, ஒருநாளின 24 மணி நேரததிறகும பெஞசமின பிராஙளின தயாரிததுககொணட கால அடடவணை ]

| | | |
|---|---|---|
| காலை | — 5 — | படுககையை விடடு எழு |
| கேளவி இனறு நான நலலது என்ன செயய செயயலாம? | — 6 —<br>— 7 — | தல ஸநான சுததி, எல லாம வலல இறைவனைத் தொழுதல! இனறையத தினததின வேலைகளைப் பறறிச சிநதிததல, தீர் மானம செயதுகொளளு தல! பிறகு படிபபு, காலை உணவு |

| | | | |
|---|---|---|---|
| | — 8 — | | ஓயவு |
| | — 9 — | | |
| | —10 — | | |
| | —11 — | | |
| மததியானனம | —12 — | படிததல அலலது என் வரவு செலவு கணககுகளை | |
| | — 1 — | மேறபாாததல , பிறகு சாப் பிடுதல | |
| | — 2 — | | ஓயவு |
| | — 3 — | | |
| | — 4 — | | |
| | — 5 — | | |
| மாலை | — 6 — | சாமானகளை அதனத | |
| கேளவி இன்று நலலது | | னிடததில ஒழுஙகுபடுததி | |
| என்ன செயதேன ? | — 7 — | வைததல, இரவுச சாப பாடு சஙகீதம அலலது | |
| | — 8 — | வேறு பொழுதுபோக்கு அலலது உரையாடல இன் | |
| | — 9 — | றையத தினம செயதன வறறைப பறறி ஆராயதல. | |
| இரவு | —10 — | | தூககம |
| | —11 — | | |
| | —12 — | | |
| | — 1 — | | |
| | — 2 — | | |
| | — 3 — | | |
| | — 4 — | | |

## திரட்டு—3

## தூக்கததில் இன்பக் கனவுகள் பெறவழி

[ ஒரு கனனிப பெண விருமபிக கேட்டதினபேரில் பெஞசமின பிராஙளின எழுதிய கட்டுரையின சுருக்க மாகும இது. ]

*நமமுடைய வாழவில பெரும பகுதி உறககததில கழிந்து விடுகிறது உறஙகுமபோது நாம சில சமயஙகளில இன்பகர*

மான கனவுகளையும் சில சமயங்களில் துன்பகரமான கனவு களையும் காண்கிறோம். துன்பக் கனவை நீக்கி இன்பக் கனவைப் பெறுவது இன்றியமையாததாகும். ஏனெனில், உண்மை யானதோ, கற்பனையானதோ, துன்பம் என்பது துன்பந்தான், இன்பம் என்பது இன்பந்தான்! நாம் கனவு ஒன்றும் காணாமல் உறங்க முடியுமென்றால், துன்பகரமான கனவுகளைத் தவிர்த்து விடுகிறோம் என்கிற வகையில் அது மிகவும் நல்லதே. ஆனால் நாம் உறங்கும்போது ஏதாவது இன்பகரமான கனவுகள் காண முடியுமென்றால், அது வாழ்க்கை இன்பத்தைப் பெருக்கும்.

இதற்கு முதலாவதாகப் பெருந்தன்மையான சுபாவத்தி னாலும் சரியான உடற் பயிற்சியினாலும் தேகாரோக்கியத்தைப் பாதுகாப்பதில் கவனமாயிருப்பது அத்தியாவசியமாகும். ஏனெ னில் நோயில் கிடக்கும்போது, கற்பனைகள் குழம்பி, ஒவ்வாத, சில சமயங்களில் பயங்கரமான எண்ணங்களெல்லாம் உறக் கத்தில் தானாகவே வந்து நிற்கும்.

உணவு கொள்வதற்கு முன்னதாக உடற்பயிற்சி செய்ய வேண்டும். உணவு உண்டவுடன் உடற்பயிற்சி செய்யலாகாது. முன்னது விருத்தி தரும்; பின்னதோ, மிதமாயிருந்தாலொழிய ஜீரண சக்திக்கு இடையூறு செய்யும். உடற்பயிற்சிக்குப் பிறகு, நாம் மிதமாய் உணவருந்தினால், ஜீரணிப்பது சுலபமானதாகவும் சுகமானதாகவும், உடல் இலகுவானதாகவும், சுபாவம் உல்லாச மானதாகவும் இருக்கும். அதைத் தொடர்ந்து ஏற்படும் உறக்கம் இயற்கையானதாகவும், கலக்கமற்றதாகவும் இருக்கும். ஆனால் வயிறு புடைக்க உண்டுவிட்டுச் சோம்பலுடன் உறங்கினாலோ, கனவு மூர்ச்சைகளும் (Nightmares) விவரிக்க முடியாத பயங் கரச் சொப்பனங்களும் உண்டாகின்றன. மலையுச்சியிலிருந்து விழுவது போலவும், மூர்க்க மிருகங்கள் கொலைபாதகர்கள், வேதாளங்கள் முதலானவற்றால் தாக்கப்படுவது போலவும், இன்னும் இவை போன்ற பலவிதமான துயரக் கனவுகளையும் அனுபவிப்போம்.

உணவு உட்கொள்ளும் அளவும் உடற்பயிற்சியும் ஒன்றுக் கொன்று சம்பந்தப்பட்டவை என்பதைக் கூர்ந்து கவனிக்கவும். அதிகமாக உடலுக்கு இயக்கம் கொடுப்பவன் அதிகமாக உணவு உண்ணவும், குறைவாகப் பயிற்சி செய்பவன் குறை வாக உண்ணவும் வேண்டும். பொதுவாக மனித ஜாதியானது, சமையற் கலை வளர்ச்சியினால், இயற்கையான தேவைக்கு இரண்டு மடங்கு அதிகமாகவே சாப்பிடுகிறது.

நாம் இரவுணவு சாப்பிடாவிட்டால் அதனால் ஒரு கேடு மில்லை, ஆனால் நெஞ்சுமுட்ட நிறையச் சாப்பிட்டுவிட்டு உறங்கினால் இரவு உறக்கம் நிம்மதியற்றதாகிவிடுகிறது. சிலர்

உடல்வாசியைப் பொறுத்துப் பயங்கரமான கனவும் மாரடைப்பும் ஏற்பட்டு மீளா நித்திரையும் கொள்ளச் செய்து விடுகிறது. நெஞ்சுமுட்ட இரவில் சாப்பிட்டுவிட்டு உறங்கச் சென்றவர்கள் அதிகாலையில் பிணமாகிப் பஞ்சணையில் கிடக்கும் செய்திகளைத் தினப் பத்திரிகைகளில் நாம் சர்வ சாதாரணமாய்க் காணலாம்.

உடல்நலத்தைப் பாதுகாப்பதில் கவனம் செலுத்தவேண்டிய இன்னொரு வழி, உங்கள் படுக்கையறையில் சதா புத்திளம் காற்று வரும்படி அமைத்துக்கொள்வதுதான்! நெருக்கமான அறைகளில் கதவுகளை மூடிக்கொண்டு உறங்குவதும் திரைச் சீலைகளால் மூடப்பட்ட படுக்கையில் உறங்குவதும் பெருந் தவறு.

நெருக்கமான அறையில் ஒருவன் வெளிவிடும் மூச்சின் துர்க்காற்று வெளியேறி அதற்குப் பதில் புதுக்காற்று உள்ளே வர முடியாமல், அவன் கெட்ட காற்றையே சுவாசித்துக் கொண்டிருப்பது தேகாரோக்கியத்திற்குக் கேடு பயக்கும். ஒருவன் தான் வெளிவிடும் மூச்சினால் ஒரு நிமிஷத்துக்கு ஒரு காலன் அளவு காற்றைக் கெடுக்கிறான். ஐந்நூறு ஆண்டுகளாக உயிர் தரித்து வந்தவன் என்று கதை சொல்லப்படும் மெதுசெல்லா திறந்த வெளிக் காற்றிலேயே உறங்கினான் என்று அறிகிறோம்!

[காற்றோட்டமில்லாமல் காற்று கெட்டித்துப் போகும் அறையில் உறங்குவதினால் உடம்பில் வியர்வை அணுக்கள் ஊறியடைத்துக்கொள்கின்றன. அவை வியாதியைக் கொண்டு வருவது மட்டுமல்ல, உறக்கத்தையும் கெடுத்து விடுகின்றன, துர்க்கனவுகளுக்கும் பொதுவான காரணமாகின்றன.]

உடலில் அவதியிருந்தால் உள்ளத்திலும் அவதியேற்படுகிறது. பலவேறு ஒவ்வாத எண்ணங்களெல்லாம் உறக்கத்தில் பல சொரூபங்களில் உருளுவதுதான் அதனால் ஏற்படக்கூடிய விளைவு. கெட்ட கனவுகளைத் தவிர்க்கவும் சிகிச்சை செய்யவும் சில தடுப்பு முறைகள்:

1. மிதமாக உண்பதினால் வியர்வை அணுக்கள் குறைவாகவே உற்பத்தியாகின்றன. [அதனால் அவதி குறைந்து நிம்மதியான உறக்கம் வரும்.]

2. மெல்லியதாகவும் நிறையத் துவாரங்கள் உள்ளதாகவுமுள்ள மெத்தை விரிப்புகளை உபயோகப்படுத்துவதினால் நம் உடம்பில் உற்பத்தியாகும் வியர்வை அணுக்கள் சுலபமாக வெளியேறும், இறுக்கம் குறைந்து உறக்கம் நல்லதாகும்.

3. நீ உறங்கும்போது உணர்ச்சியுடன் திடீரெனக் கண் விழித்துக்கொண்டால், மறுபடியும் உன்னால் சுலபமாக உறங்க முடியவில்லை யென்றால், படுக்கையை விட்டு எழுந்து நில், உன் தலையணைகளை அடித்து உதறி அதைத் திருப்பிப்போடு, உன் மெத்தை விரிப்புகளைக் குறைந்தது இருபது தடவைகளாவது உதறிவிட்டு, உன் படுக்கையைத் திறவையாகக் காற்றில் குளிரவிடு இத்தறிடையில் உன் மேனித் தோல் வியர்வை அணுக்கள் நீங்கிப் புதுக் காற்றில் பழைய நிலை அடையும்படி உன் படுக்கையறையில் அங்குமிங்கும் சிறிது நேரம் நட இரவின் குளிர்ந்த காற்றை இனி ஏற்க முடியாதென ஓர் உணர்ச்சி உனக்கு வந்ததும் உன் படுக்கையில் மறுபடி படுத்துறங்கு, உடனே உனக்கு அயர்ந்த உறக்கம் வரும், உன் உறக்கம் இனிமையானதாகவும் மனோரம்மியமாகவும் இருக்கும்

[முடிந்தால் இரண்டு படுக்கைகள் வைத்துக்கொண்டு, ஒன்று உஷ்ணமடைந்துவிட்ட பிறகு குளிர்ச்சியான இன்னொன்றில் படுத்துறங்கலாம் ]

[ படுக்கச் செல்லுமுன் உன் தலையணையை உனக்கேற்ற வகையில் இலகுவாக அமைத்துக்கொள் உடலுறுப்புகள்— உதாரணமாக முழங்கால் முட்டிகள், ஒன்றோடொன்று அழுத்தி அசௌகரியம் உண்டாக்காத நிலையில் வைத்துக் கொண்டு உறங்கு ]

[ ஆனால் இவற்றிற்கெல்லாம் மேலானதாக, இன்பக் கனவுகளும் நிம்மதியான உறக்கமும் ஏற்படுவதற்கு நல்ல மனச்சாட்சியை வளர்த்து வருவதில் கருத்து இருக்கவேண்டும் நல்ல மனச்சாட்சி இல்லாவிட்டால் நல்ல உறக்கத்தையும் கனவுகளையும் பெறச் செய்யப்படும் எந்த முயற்சியும் பலனற்றதாகி விடும் ]

## திரட்டு—4

## காட்டுமிராண்டிகளும் நாகரிகமும்

[ வட அமெரிக்காவின் காட்டுமிராண்டிகளைப் பற்றி பிராங்ளின் எழுதிய குறிப்புகளின் சுருக்கம்]

காட்டுமிராண்டிகள் என்று சொல்லுகிறோம் நாம் நாகரிகத்தின் பரிபக்குவம் என்று கருதும் நம் நடையுடை பாவனைக்கு மாறுபட்டிருக்கிறார்கள் என்பதினாலேயே அவர்களைக் காட்டுமிராண்டிகள் என்கிறோம். அதைப் போலவே அந்தக் காட்டுமிராண்டிகளும் தங்களுடைய நடையுடை பாவனைகளை நாகரிகத்தின் பரிபக்குவம் என்று கருதுகிறார்கள்

நம்மால காட்டுமிருண்டிகள என்று சொலலப்படும மேற் இநதியாகள இளமையாயிருககுமபோது வேட்டைக்காரர் களாகவும போாவீராகளாகவும விளஙகுகிறாகள, கிழவா களாகிவிட்டால ஆலோசகாகளாகிறாகள அவாகளிடையே ராணுவ பலமோ, சிறைககூடஙகளோ, தணடனை கொடுக்க உததியோகஸதாகளோ, கீழபபடிததலை வறபுறுதத மேலதிகாரி களோ இலலை நமமுடைய நாகரிகததின செயறகைத தேவைகள அவாகளிடையே குறைவாக இருபபதால அவா களுககு நிறைய ஓயவும சமபாஷணையை வளாததுககொளள சநதாபபமும இருககிறது நமமுடைய நாகரிக வாழவை அடிமைப பாஙகானதெனறும கீழததரமானதெனறும காட்டு மிருணடிகள கருதுகிறாகள நாம நமககுளளே பெரிதாக மதிததுக கொணடிருககும நமமுடைய கலவி முறையை அநதக காட்டுமிருணடிகள அறபமானதெனறும உபயோகமறற தெனறும கருதுகிறாகள கிழவாகள குமராகள ஆண பெண குழநதைகள அடஙகலாக அவாகள அடிககடி சபை கூடி எதையும தீாமானிபபதால அவாகள சபையை நடததும வகையில நலல ஒழுஙகும நாகருககும நிறைநதிருககிறது சபையில ஒருவன் எழுநது பேசுமபோது பூரண மெளனததுடன எலலோரும கருததூனறிக கவனிபபாாகள நடுவில குறுக கிட்டுப பேசுவதை மிகவும கீழததரமானது எனறு அவாகள கருதுகிறாகள இநதக காட்டுமிருணடிகளின சபையானது பிரிட்டிஷ மககளசபையின நடததையிலிருநது எவவளவு மாறு பட்டிருககிறது! நாகரிக சபையில குழபபமும சபைத தலைவா 'ஒழுஙகு! ஒழுஙகு' எனறு காணகடூரமாகக கூவாத நாளும இராதே!

[காட்டுமிருணடிகளிடம, அதிதி உபசரணை, அநநியா களிடம மதிபபு, பலனையோ பணததையோ எதிாபாராமல உதவி புரியும மனிதத தனமை, பணிவு, குழைவு முதலான நலல பணபுகள இருககினறன இவை நாகரிக புருஷாகளிடம இலலாத சரககுகள!]

திரட்டு 5

# பிராங்ளின் பொன்மொழிகள்

## அரசியல்

### அரசியல் சரிததிரம்

அரசாஙகஙகளும அரசாக ளும செயத பிழைகள நிறைய சரிததிரததில மலிநதிருக கினறன

### சுதந்திரம்

எஙகு சுதநதிரம வாழ கிறதோ அஙகுதான் என நாடு இருககிறது

சுதநதிரம என்ற சூரியன அஸதமிததுவிடடது, இனித தொழிற சுறுசுறுபபு, பொரு ளாதாரம என்ற மெழுகுதிரி விளககுகளை நீஙகள ஏற்றி எரிய விடவேணடும!

தறகாலிகமான சிறியதொரு பாதுகாபபை விலைககு வாஙகு வதறகாகத தஙகளது அததியா வசியமான சுதநதிரததை விடடு விடுபவாகள சுதநதிரததிறகும தகுதியானவாகளலல, பாது காபபிறகும தகுதியானவா களலல

### புரட்சி

கொடுஙகோலருககுப புரடசி என்பதுகடவுளுக்குக்கீழபடியச செய்வதாகும!

### ஒற்றுமை

நாம எலலோரும ஒனறுகக கழுததைக கடடிக கொணடு தொஙகுவோம, இலலையெனில நாம தனித தனியாகத தூககில தொஙக நேரிடுவது நிசசயம!

### யுததம்

நலல யுததம எனறு ஒனறு இருநததுமிலலை, கெடட சமா தானம எனறு ஒனறு இருநதது மிலலை

### சமாதானம்

அதிநோமையான சணடைக குபபதில அதிமுறையற்ற சமா தானததையே தோநதெடுப பேன

### ஜனாதிபதி

இதோ வாழததுரொடடி! இதோ மாபெரும பிரிடடிஷ தேசததுககு, பூமியின தேசங களை அனைததுககும ஒளிகொடுக் கும சூரியனுககு!

இதோ பிரெஞ்ச் தேசத்துக்கு, பூமியின் அலைகளையெல்லாம் தன் மாயரேகைகளால் அலைவிக்கும் சந்திரனுக்கு!

இதோ நம் அன்புக்குரிய அமெரிக்க ஜனாதிபதியான வாஷிங்டனுக்கு! அவர் சூரியனையும் சந்திரனையும் ஸ்தம்பித்து நிற்கும்படி கட்டளையிட்டார்—அவை கீழ்ப்படிந்தன!

## கட்சிகள்

யுத்தங்கள், புரட்சிகள் முதலான உலகின் மாபெரும் வியவகாரங்களெல்லாம் கட்சிகளாலேயே வளர்க்கப்பட்டு விளைந்திருக்கின்றன.

பலவிதமான கட்சிகளின் பலவிதமான கொள்கை நோக்கங்களே குழப்பத்திற்கு இடம் தருகின்றன.

ஒரு கட்சியானது பொது நோக்குடன் செயல்படும்போது அதிலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் தனிப்பட்டக் குறிப்பிட்ட நோக்கங்களும் கலந்தே யிருக்கும்.

ஒரு கட்சியானது தனது பொது இலட்சியத்தை அடைந்தவுடனே, அதிலுள்ள ஒவ்வொரு உறுப்பினனும் தன் சொந்த நோக்கத்தின்மீது கருத்துச் செலுத்துபவனாகி மாறுகிறான், அதனால் மற்றவர்களைக் குறுக்கிட்டு எதிர்ப்பவனாகி கட்சியைச் சிறு சிறு பிரிவுகளாகவும் கோஷ்டிகளாகவும் உடைத்துச் சிதறச் செய்து, குழப்பங்களுக்குச் சந்தாபமளிக்கிறான்.

பொது வியவகாரங்களில் ஈடுபடுவோர்களில் மிகச் சிலர்தான் மனித ஜாதிக்கு நன்மை பயக்கவேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் பாடுபடுவார்கள்.

பண்பிற்காக ஐக்கியக் கட்சி ஒன்றை உண்டாக்கி, அதில் சர்வதேசங்களிலுமுள்ள நல்லவர்களையும் பண்பாளர்களையும் ஒன்று திரட்டி ஒழுங்கான உடலுறுப்பாக்குவது நற்சமயம் அத்தியாவசியமான தேவை என்றுகூட எனக்குத் தோன்றுகிறது.

## மதம்

## ஒரே மதம்

“அறிஞர்கள் அனைவரும் ஒரே மதத்தைத்தான் சேர்ந்தவர்களாயிருக்கிறார்கள்” என்றார் அறிஞர். அங்கிருந்த பெண்மணி ஒருத்தி “அது என்ன மதம்?” என்று கேட்டாள். அதற்கு அறிஞர் உடனே, “அறிவாளிகள் வாய்திறந்து சொல்வதில்லை” அம்மணி! என்று பதிலளித்தார்.

## கடவுள்

ஒரே கடவுள்தான் உண்டு.

அறிவின் ஊற்றுநீர் வீசக்கூ தான் கடவுள்.

மனிதர்களுக்கு நல்லது செய்வதுதான் கடவுளுக்குச் செய்யும் மிக நல்ல தொண்டாகும்.

போற்றுதலாலும், ஸ்துதியாலும், நன்றியுணர்ச்சியாலும் அவரை வழிபடலாம்.

கடவுள் தன் நற்கருணையால் இந்த உலகத்தை ஆளுகிறார்

### ஆத்மா

ஆத்மா அழிவற்றது

### உபதேசம்

சொந்தமாக உற்பத்தி செய்த மட்டமான உபதேசங்களை விடப் பிறர் உருவாக்கிய நல்ல உபதேசங்களைத் தனனுடையதாகச் சொல்வது எவ்வளவோ மேலானது ஆனால் நம்முடைய உபதேசர்களோ மட்டமான உபதேசங்களைச் சொந்தமாக உற்பத்தி செய்து தள்ளுவதுதான் சாதாரணப் பழக்கத்திலிருந்து வருகிறது

## பொருளாதாரம்

### பணம்

பணத்தின் மதிப்பு உனக்குத் தெரிய வேண்டுமென்றால், எங்கேயாவது போய் கொஞ்சம் கடன் வாங்கிப்பார்!

மங்கையர், மது, சூதாட்டம், பந்தலாட்டம்—இவை, செல்வத்தைக் குறைக்கும், தேவைகளைப் பெருக்கும்

பணத்தின் உபயோகந்தான் பணத்தைப் பெற்றிருப்பதின் அனுகூலமாகும்

நேரந்தான் பணம் என்பதை நினைவில் வைத்துக்கொள். உழைப்பின் மூலம் ஒரு நாளைக்குப் பத்து ஷில்லிங் பணம் சம்பாதிக்கக்கூடிய ஒருவன், பாதி நாளைச் சோம்பேறித்தனமாய் உட்கார்ந்து விரையமாக்குவானாகில், அவன் ஐந்து ஷில்லிங் பணத்தை இழந்தவனாகிறான்

கணக்கில் வரவு இருப்பதும் பணம்தான் என்று நினைவில் வைத்துக் கொள்

பணம் என்பது குட்டி போட்டு இனவிருத்தி செய்யும் இயற்கையுள்ளது என்பதை நினைவு வைத்துக் கொள்.

பணம் பணத்தைக் குட்டி போடும், அதன் குட்டிகள் இன்னும் அதிகமாகப் பிரசவிக்கும்

ஏராளமாகப் பணம் செலவழித்துத் திரிபவன் இன்னொருவனின் பணப் பைக்குப் பிரபுவாக விளங்குவான் என்பதை நினைவு வைத்துக்கொள்

சுருக்கமாகச் சொன்னால் செல்வத்திற்கு வழியானது சந்தைக்குப் பாதைபோல் தெளிவானதாகும் அது, சுறுசுறுப்பு சிக்கனம் என்ற முக்கியமான இரண்டு வார்த்தைகளைப் பொறுத்திருக்கிறது, அதாவது நேரத்தையோ பணத்தையோ வீணாகச் செலவழிக்காதே, இரண்டையும் நன்றாக உபயோகப் படுத்திக் கொள்

நூறு பணம் சம்பாதித்து விட்டால் பிறகு இரண்டாவது நூறு பணத்தைச் சம்பாதிப்பது வெகு சுலபம்

### வரிகள்

அரசாங்கம் போடும் வரிகளை மட்டும் நாம் செலுத்தினால்

போதும என்றிருநதால நாம மிகச சுலபமாக அவவரிகளைக் கொடுதது விடுவோம ஆனல இன்னும வேறு பல வரிகள இருககினறன, அவைதான நமமில சிலரிடம அதி துயர மானவையாக இருககின்றன நமமுடைய **சோமபேறிததனம** நமககு இரணடு மடஙகு வரிப போடுகிறது, நமது **அகமபாவம** மூனறு மடஙகு வரிப போடுகிறது, நமது **மதியீனம** நானகு மடஙகு வரிபபோடுகிறது இநத வரிகளிலிருநது வரி வசூல கமிஷனா நமமைக காப பாறறவோ, வரிததளளுபடியை அனுமதிதது நமமை விடுதலை செயயவோ முடியாது!

## கடன்

கடன வாஙகியவாகளைவிடக கடன கொடுததவாகளுககு நலல ஞாபக சகதி உணடு

கடன கொடுததவாகள தவணைத தினஙகளை ஒருபோதும மறககமாடடாாகள

கடன கொடுததவாகள கால நாழிகைகளையும நாள கிழமைகளையும தவருமல கணகாணிககும ஓா அதீதமான மததைதச சோநதவாகள!

கடன வாஙகுபவன கடன கொடுததவனுககும, பறறுககாரன் வரவுககாரனுககும ஓா அடிமை ஆகிவிடுகிருன

புளுகுவது இரணடாவது தீமைதான, கடன வாஙகுவது தான் முதலாவது தீமை

கடனின் முதுகுமீது புளுகு சவாரி செய்கிறது

கடன் வாங்கப் போகிறவன் துயாபபடப போகிருன அதததகையவாகளுககுக கடன் கொடுபபவன் நிலையும அப்படியே! கடனை அவாகளிடம வசூலிககப போகிறவனும துயாபபடப போகிருன!

நீ கடன வாஙகுகிருய் என்ருல, உன சுதநதிரததின் மீது இனனொரு சகதிககு ஆதிககம கொடுககிருய எனறுதான் அாததம

கடனில கண விழிதது எழுவதைவிட இராபபடடினியுடன் படுககபபோவது நலலது

குறிபபிடட தவணையில நீ கடனைத திருபபிக கொடுகக முடியவிலலை யெனருல, உனக்குக கடன கொடுததவன் முகததில விழிகக அவமானபபடுவாய, அவனேடு பேசுமபோது பயததில மூழகிககிடபபாய, பரிதாபமாய தயஙகித தயஙகி அறபததனமான மனனிபபுக களெலலாம கேடபாய, படிப படியாக உன ஆணமையான நோமைத திறதமையும இழநது வருவாய, கடைசியில துணிநது கீழததரமாக வெலலாம புளுகித தளளுவதில மூழகிவிடுவாய தொழில துறையிலுளள ஓா இளைஞனுககுச சுறு சுறுபபையும சிககனததையும தவிர, அவனது வியவகாரஙகள அனைததிலும நோமையாளனுகவும தவணை தவருதவனுகவும இருபபதானது அவனை இநத உலகில உயாதத உதவுவது போல வேறெதுவும உதவுவ திலலை ஆகவே, கடன வாஙகிய பணததைக குறிதத தவணைககு

மேல ஒரு மணி நேரஙகூட உன கையில வைததிராதே

நீ கடன படடிருபபதைப பறறிக கருததுளளவனாயிருககி றாய எனறால, அது உனனை நாணயமானவனாகவும கவன முளளவனாகவும தோனறச செயது உனககுக கடன கொடுககிறவாகளிடையே உன மதிபபை உயாததிவிடும

தொழில சுறுசுறுபபானது கடனகளைச செலுததிவிடுகிறது, ஏமாறறததுடன சோமபியிருப பதோ கடனகளைப பெருககி விடுகிறது

## சிக்கனமும், ஆடம்பரமும்

இலாபம எனபது தறகாலிக மானது, நிசசயமறறது ஆனால உன வாழநாள முழுவதும செலவு எனபதோ, நிலையானது நிசசயமானது

நமமுடைய தொழிலை வெற றிகரமாக நிலைககச செயய வேணடுமெனறால கூடவே சிககனததையும சோததுக கொளள வேணடும

ஊதாரித தனஙகளினால நாக ரிக புருஷாகள வறுமையை நோககித தாழநது போகிறா கள, முனனே எவாகளை நிநதித தொதிககிறாகளோ அவாகளிடமே கடன வாஙகும கடடாயமும ஏறபடுகிறது

பகலுககுப பின இரவு வரும எனபதைப பலா மறநது விடு கிறாகள

சிறுசிறுசெலவுகளைப பறறிக கவனமாயிரு, ஒரு சிறு ஓடடையே ஒரு பெரிய கபபலை மூழகடிதது விடும

ஓயாமல விழுநதால கறக ளும தேயநது விடுகினறன

சீரானபோககினாலும பொ றுமையினாலும, சுணடெலியா னது இரணடகததனை வடக கயிறுகளையும தினறு விடு கிறது

சிறு சிறுகோடாலி வீசசுகள பெரிய பெரிய மரஙகளையும சாயததுவிடும

ஆடை ஆடமபரச செருக கினமீதுளள ஆசையானது ஒரு பெரிய சாபககேடாகும உஙகள ஆடமபரமனோபாவனை ஆலோசனை கூறும ஒவவொரு சமயததிலும உஙகள பணப பையை ஆலோசியுஙகள!

வீண பெருமையைப பகல விருநதாக அருநதும அகம பாவமானது நிநதனையை இரவுணவாக அருநதுகிறது

வீண கௌரவமானது காலைப பலகாரததை ஏராளத துடன சாபபிடடது, மததியான விருநதை வறுமையுடன் சாப பிடடது, இரவுணவை இழிவு டன விழுஙகியது

ஆடமபரத தோறறததின மமதையால கிடைககும பிர யோஜனம எனன? அது தேகாரோககியததைப பெருக குவதுமிலலை, வேதனை வலி களைக குறைபபதுமிலலை, போ வழியின உடபுற மதிபபை வளாபபதுமிலலை, அதறகுப பதில அது பொறாமையை உற பததி செயகிறது, தூபாககி யததை விரைவில கொணடு வருகிறது

வணணுததிப பூசசி என்ருல என்ன ? அது சிறபபாக ஆடை யுடுததிய ஒரு கமபளிப பூசசி தான ! வாணப பகட்டான பிலுககானின சிததிரநதான அதனது வேடிககையான கோலம !

குழநதையும முட்டாளும ஒரேமாதிரி இருபது பணததையும இருபது வருஷஙகளையும எபபடிச சுலபமாகச செலவழிகக முடியும என்று கறபனை செயது கொளகிருாகள

உபயோகமறற ஊதாரிததனஙகளுககாகக கடனில மூழகுவதெனபது எவவளவு பைததியககாரததனம

உணவுத தொட்டியில ஒன்றுமே போடாமல ஓயாமல எடுததுககொண்டே யிருநதால அதன அடியைததான சுரண்டும காலம வநது சேரும !

கிணறுவறறிபபோனுலதான தணணீரின அருமை தெரியும

பயிராககக்கூடிய விதைதுகளைக கொன்று உணபவன அதனது சநததிகளை ஆயிரம தலைமுறை வரை அழிதது விடுகிருன

ஸிலக ஸாட்டின துணிகள வெலவெட செமபட்டாடைகள முதலானவை சமையலறையினநெருபபை அணைதது விடுகின்றன

இவைகள வாழவின தேவைகளலல, வாழவின் செளகரியஙகள என்று வேணடுமானுல ஓரளவு சொலலிக கொளளலாம

மனிதஜாதியின செயறகைத தேவைகள இவவாறு இயறகைத தேவைகளைவிட எணணறறவைகளாகி விட்டன

முதுகில அழகாக அலஙகரிததுக கொளவதறகாகப பலா வெறும வயிறுகளுடன போயிருககிறாகள, தஙகள குடுமபஙகளைப பாதிப பட்டினியும போட்டிருககிறாகள

கொஞசம கேளீா எபபோதாவது கொஞசம பானம, இன்னும கொஞசம விலையுயாநத தினபணடம, இன்னும கொஞசம நளினமான ஆடைகள, அபபோதைககப போது கொஞசம உலலாசக களியாட்டஙகள—இவை ஒரு பெரிய விஷயம இலலையென்று நினைககலாம, ஆனுல பல சினனதுகளதான ஒரு பெரியதாகிறது, எனபதை மறநது விடாதீாகள

## சாமான்கள் வாங்குதல்

சாமனகள வாஙகும போது ரொககபபணம கொடுபபது தான நலலது

சாமானைக கடனுககு வாஙகி வைததிருபபவன அதை உபயோகபபடுததுவதறகு வட்டியும கொடுககிறன !

நீ ஓா அழகான சாமானை வாஙகி வநதால அதறகுப பொருததமாக இனனும பதது அழகான சாமானகளை வாஙக வேணடியிருககும

உனககுத தேவையிலலாதவறறை விலைககு வாஙகினுல உனககுத தேவையுளளவறறை விரைவில விறக நேரிடும

கூலிக்காசு விலையுள்ள நல்ல சாமான்களை நிறைய வாங்குவதின் மூலம் பலர் சாவகாசமடைந்திருக்கிறார்கள்

## சேமிப்பு

உன் வாழ்நாள் முழுமைக்கும் தேவைகளும் உன்னால் முடிந்தபோதே சேமித்து வைத்துவிடு! வைகறை அருணோதயம் நாளும் பூராத தங்கியிருப்பதில்லை!

நீ செலவழித்துடன் இருக்க வேண்டுமென்றால் சம்பாதிப்பதைப்போலச் சேமிப்பதையும் பற்றி நினை

உன்னால் முடிந்ததைப் பெறு, பெற்றதை நிலையாகக் கைப்பற்றிக் கொண்டிரு-அதுதான் உன் ராயத்தை யெல்லாம் பொன்னாக மாற்றும் மாயமந்திரக்கல

என்னிடம் இப்போது ஓர் ஆடும் ஒரு பசுமாடும் இருப்பதால் என்னை எல்லோரும் வாழ்த்துகிறார்கள்

மனிதன் தான் சம்பதிப்பதை எப்படிச் சேமிப்பது என்று அறியாமலிருப்பானேயாகில், அவன் தன் வாழ்நாள் முழுதும் தன் மூக்கைச் சாணைக் கல்லில் கொடுத்துத் தீட்டித் தீட்டி ஒரு காசுக்கும் பொருமதியில்லாதவனாய் தேய்ந்து மாய்ந்து போகிறான்

சுறு சுறுப்பாயிரு, சுதந்திரமாயிரு, சிக்கனமாயிரு,

உங்களது மதியீனமான செலவுகளை விட்டு நீங்களுங்கள் கெட்ட காலம் என்றோ, வரிப்பளு என்றோ, பிடுங்கித் தின்னும் குடும்பச் சுமை என்றோ நீங்கள் குறை கூறுவதற்கு அவ்வளவு முகாந்திர மேற்படாது

## உழைப்பு

உழைப்பின்றி பலர் தங்கள் புத்திசாமர்த்தியம் ஒன்றினாலே வாழ்ந்து கொண்டிருக்கலாம், ஆனால் சேமிப்புத் தேவையினால் அவர்கள் வாழ்க்கை உடைந்து போகிறது

முழங்கால் மண்டியிட்டிருக்கும் கனவானைவிடக் கால் நிமிர்ந்து நிற்கும் உழவன் உயர்ந்தவன்!

உழைப்பவனின் வீட்டிற்குள் பசி எட்டிப் பார்க்குமே தவிர, உள்ளே நுழைந்து விடத் துணியாது

உழைப்புச் சுறு சுறுப்பானது வசதிகளையும் ஏராளத்தையும் நம்பிக்கையையும் கொண்டு வந்து தருகிறது

## ஏழை

ஏழையான ஒருவனுக்கு நூறு விதமான தரித்திரங்கள் இருக்கின்றன

மாட்டுக்குச் சமமாக வேண்டுமென்று தவளையும் வீங்க முயன்றால் அது எவ்வளவு மதியீனமோ அவ்வளவு மதியீனமானது ஏழையொருவன் பணக்காரன் வேஷம் போடமுயல்வதும்

பெரிய பெரிய ஜமீன்கள் அதிகமாகத் துணிந்து சாகஸங்கள் புரியலாம் ஆனால் சின்னஞ் சிறு படகுகள் கரையருகே பத்திரமாகச் செல்வது தான் நல்லது

## வறுமை

பெரும்பாலும வறுமை தான் மனிதனிடமுளள ஜீவனை யும் பண்புகள அனைததையும தினறு விடுகிறது

## செல்வம் நிலையாமை

உங்களுடைய செலவமெல லாம உண்மையில உஙக ளுடையதாயிருநதால, உஙக ளுடன் அவறறையும ஏன் மறு உலகிறகு எடுததுச செலவ திலலை ?

## ஈகை

உதவி தேவைபபடடவா களாகத தறசமயம தோன்று பவாகளுககு ஈகை யறறவனு யிராதே, அவாகளுககு உதவி யும வசதியும கொடு

## கருமி

எனககு ஒரு கருமியைத தெரியும அவன ஒவவொருவித சௌகரியமான வாழககையை யும கை விடடு விடடான வாழககை வசதிகளையும, பிற ருககு நனமை செயவதால உணடாகும ஆனநதம அனைத தையும, சொநத நாடடவாக ளின் மதிபபுகள அனைததையும பயனுளள நடபின உலலாசம அனைததையுப, அவன செல வம திரடடிக குவிபபதறகாகக கை விடடு விடடான 'ஒரு ஊதுகுழலுககாக அதிக விலை கொடுததுவிடடாய!' எனறேன் நான !

## வாழ்க்கை

### உலகம்

இநத உலகில சாவையும வரிகளையும தவிர எதுவும் நிச்சயமிலலை !

உலகம என்பது ஒரு சக் கரம அது சுழன்று சுழன்று நேராகவே வநது சேரும

### மனிதன்

உபகருவி செயயும ஓர் ஜநது தான் மனிதன

### வாழ்க்கை

மறுபடியும ஓர முறை வாழ எனககுச சநதாபபம அளிக் கிறேன என்பது உணமை யானால, மீணடும துவக்கம முதல இறுதி எலலை வரை ஓடி, அதேவிதமான வாழக்கையே மறுபடியும வாழத தயாரா யிருககிறேன் ஆனால நான் கேடபதெலலாம ஒரு புததகா சிரியனுககுரிய சலுகைதான— அதாவது முதற பதிபபில விட டுபபோன சில பிழைகளை மறு பதிபபில திருததிககொளளும சலுகைதான் !

மனிதனுககும மனிதனுககு மிடையே யுளள வியவகாரங் களில, மெயமை, நோமை, முழுமை—இமமூனறும வாழ வின செழிபபிறகு அததியா வசியமானவை எனறே கருதி வநதிருககிறேன

## புததிமதி

புததிசாலிககு ஒரு வாாததை போதும, ஆனால முடடாளுக்கு எததனை வாாததைகள சொன் னாலும அணடா நிறையாது

ஜனஙகள புததிமதிகளைக் காது கொடுததுக கேடடு அக் கொளகைகளை ஆமோதிததாா கள, உடனே அவறறிறகு நேர்

மாறானவற்றைக் கடைப்பிடித்தார்கள்

நாம் நல்ல புத்திமதி கொடுக்கலாம், ஆனால் நல்ல நடத்தையைக் கொடுக்க முடியாது

## உதவி

ஆலோசனை பெற விருப்பமில்லாதவர்களுக்கு நாம் ஓர் உதவியும் செய்துவிட முடியாது

## அனுபவம்

அனுபவந்தான் அருமையான பள்ளிக்கூடம், முட்டாள்கள் வேறெதிலும் கற்றுக்கொள்ள மாட்டார்கள்

அனுபவந்தான் சிறந்த பள்ளிக்கூட வாத்தியார், ஆனால் பள்ளிக்கூடச் சம்பளந்தான் அதிகப் பாரமாயிருக்கிறது!

## அறிவு

ஆராய்ந்து அறியும் அறிவு தேவிக்கு நீ காது கொடுத்துக் கேட்காவிட்டால், அவள் உன் முழங்கால் முட்டியை உடைத்து விடுவாள்

## அறிவாளிகள்

அறிவாளிகள் மற்றவரின் கேடுகளிலிருந்து பாடம் கற்றுக்கொள்கிறார்கள், ஆனால் முட்டாள்கள் சொந்தக் கேடுகளிலிருந்தும் பாடம் கற்றுக்கொள்வது அபூர்வம்

## புத்திசாலிகள்

சிலர் பருவச் சூழ்நிலையிலும் கெட்டுப்போகாத புத்திசாலிகளா யிருக்கிறார்கள், சிலர் வேறுவிதமாயிருக்கிறார்கள்

## திறமைசாலி

எவ்வளவுதான் திறமைசாலி என்றாலும் தீமையான மனிதனைப் புத்திசாலி யென்று சொல்லுவது சரியல்ல

## பளுவானவை

நண்பர்கள், பக்கத்து வீட்டுக்காரர்கள், அரசாங்க வரிகள்— இவை உண்மையில் மிகவும் பளுவானவைதாம்!

## மானம்

கண்ணாடி, சைனா, மானம் இம்மூன்றும் வெகு சுலபமாக உடைந்துபோகக் கூடியவை, மறுபடி ஒட்டவைக்க முடியாதவை

## காதல்

நீ காதலிக்கப்பட வேண்டும் என்றால் நீ காதலிப்பவனாயும் காதலுக்கு உகந்தவனாயும் இரு

## திருமணம்

எங்கே காதல் இல்லாமல் கலியாணம் இருக்கிறதோ, அங்கே கலியாணம் இல்லாமல் காதலும் இருக்கும்!

மூன்று விஷயங்களில்தான் ஆட்கள் அதிகம் ஏமாந்து போகக் கூடியவர்களாயிருக்கிறார்கள் அவை—ஒரு குதிரை, ஒரு டோப்பா மயிர், ஒரு மனைவி!

அடிக்கடி வெட்டப்படும் மரமோ, அடிக்கடி பிரிந்து விலகிப் போகும் குடும்பமோ, நிலையான மரத்தையும் நிலையான குடும்பத்தையும் போலச் செழித்தோங்கியதை நான் கண்டதேயில்லை!

நானும என் மனைவியும ஒருவரை யொருவா மகிழ விகக என்றென்றுமே பரஸ பரம முயறசிசெயது வநதோம

ஆணும பெணணும ஒன்று சோவதுதான மனிதத தனமை யைப பரிபூரணமாககுகிறது

திருமணமாகாத ஏகாஙகி அரைகுறையான மிருகமே பாதிக கததிரிக்கோலபோல அவன தோறறமளிககிறான

மண வாழககைதான மனி தனின அதிஇயறகையான நிலை யாகும அநத நிலையிலதான நீங கள சததுபபிடியான ஆனநதத தைக காணமுடியும மண வாழககையில புகுவதறகு எதி ராக நீஙகள கூறும காரணங களெல்லாம அடிபபடை யறறனவாகவே எனககுத தோனறுகினறன

## பெண்கள்

பெணகளெல்லாம புததகங களா? அவவாறானால நான ஒவ வொரு வருஷமும பெணணை மாறறியமைககும பஞசாங கமா யிருபபேன!

## மகள்

கடமைபபடாத மகள கடடுப படுதத முடியாத மனைவியாக விளஙகுவாள!

## குழந்தை வளர்ப்பு

உஙகள குழநதைககு நாக கை அடககிககொளளக கறறுக கொடுஙகள, அதுபோதுமான ளவு பேசத தாஙகவே கறறுக கொளளும

## பெண் கல்வி

வரவு செலவைப பறறிய கணககுப பாடநதான நம இளம பெணகளின கலவித திடடததில முககிய அஙகம வகிககவேணடுமென நான சிபாரிசு செயகிறேன ஏனெ னில அதுதான சஙகீததைதயும நடனததையுமவிட அவாகளுக கும அவாகளின குழநதைகளுக கும அதிகமாக உபயோகப படும

## தீமை

ஒரு தீமையை ஊடடி வளாப பதானது இரணடு குழநதை களை உறபததி செயயும!

## தீச்செயலகள்

தீயசெயலகள தடை செய யபபடடிருககினறன எனபதி னாலதான அவை கேடானவை எனபதலல, அவை மனித சுபா வததை யொடடிக கேடு செய் பவை எனபதினாலதான தடை செயயபபடடிருககினறன!

கடவுள தறபோதோ பிற பாடோ நலல பணபுககுப பரி சளிதது தீமையைத தணடிப பாா எனபது சாவ நிசசயம

இநத உலகில ஆனநதமாக வாழ விருமபும ஒவவொரு வனும நலல பணபுளளவனா யிருபபதில கருததுளளவனா யிருககவேணடும

## பழிவாங்குதல

தீமைககுப பழிவாஙகுவதை விட, மனனிபபது அதிகண ணியமானது, நிநதிபபது அதி மனிதத தனமையானது

## உணர்ச்சி

உணர்ச்சி என்பது சில சமயங்களில் பகுத்தறிவையும் மீறிய பலமுள்ளதாக இருக்கிறது.

மற்றவர்களின் உணர்ச்சிகளை நேரிடையாக மறுத்துப் பேசும் சுபாவத்தை என்னிடமிருந்து விலக்கிக் கொண்டேன்.

## ஆசை

முதலாவது ஆசையைப் பின்தொடர்ந்து வரும் மற்ற ஆசைகளையெல்லாம் நீ திருப்தி செய்வதைவிட, முதலாவது ஆசையை அடக்கி விடுவது உனக்குச் சுலபமாயிருக்கும்.

ஆசைகள் அரைமடங்கானால் அவனுடைய சங்கடங்கள் இருமடங்கு பெருகும்.

## அகம்பாவம்

ஆசையைப் போலவே மமதையும் உரக்கச் சப்தமிடும் ஒரு பிச்சைக்காரனைப் போன்றதுதான், இன்னும் அதிகக் குறும்பானதுங்கூட.

அகம்பாவத்தைப்போல நம் சுபாவ வெறிகளில் அடக்குவதற்குக் கடினமானது வேறெதுவுமில்லை. அதை மறையுங்கள், அடித்துப் போராடுங்கள், அதை அமுக்கி அடக்கிக் கொல்லுங்கள், அப்போதும் அது உயிருடன் மெல்லத் தலை நீட்டி எட்டிப்பார்க்கும்.

## சுயப்பற்று

தன்மீதே காதல் கொள்பவனுக்குப் போட்டிகள் கிடையா!

## இரகசியம்

ஓர் இரகசியத்தை மூன்று பேர்கள் காப்பாற்றி விடலாம், அதாவது அவர்களில் இரண்டு பேர்கள் இறந்துவிட்டால்!

## பேச்சு

உரையாடல்களில் நாக்கை உபயோகப்படுத்துவதின் மூலம் அதிக அறிவு பெறலாம்.

கால் தடுமாறினால் சமாளித்துக் கொண்டு நிற்கலாம், ஆனால் நாக்குத் தவறினால் நீங்கள் மீளவே முடியாது.

முட்டாளின் இருதயம் அவன் வாய்க்குள் இருக்கிறது, ஆனால் புத்திசாலியின் வாயோ அவன் இருதயத்துக்குள் இருக்கிறது.

## உணவு

சமையற்கலை வளர்ச்சியினால், பொதுவாக மனிதஜாதியானது இயற்கையான தேவைக்கு இரண்டு மடங்கு அதிகமாகவே சாப்பிடுகிறது.

சுவையான பண்டங்களை விரும்புபவர்கள் பிச்சைக்காரர்களாவார்கள்.

கொழுத்துப் பெருக்கும் ஒரு சமையலறை மெலிவானதொரு உயில் உண்டாக்குகிறது.

முட்டாள்கள் விருந்து சமைக்கிறார்கள், அறிவாளிகள் அவற்றைச் சாப்பிடுகிறார்கள்.

வெறும் சூன்யமான பை நேராக நிமிர்ந்து நிற்பது சிரமம்.

## தேவை

தேவையினமுன் எநதசசட்ட முமம் இலலை, அது போனற சில வககிலககளையும எனககுத தெரியும

நீயும நானும வெகுகால மாய நணபாகளாய இருநது வநதோம, இபபோது நீ என எதிரி, நான உன எதிரி

## நல்லகாலம்

நலலகாலததிறகாக ஏஙகு வதும எதிாபாாபபதும எதைக குறிககிறது? நாம துளளி யெழுநதால நாமே அநத நலல காலததை உணடாககிவிட முடியும!

எதையும எதிாபாாதது வெறும எதிாகால நமபிககை யின் மூலமே வாழபவன உணணாவிரதமிருநது சாகிறான

சுறறுசசூழபபுககு எதையும எதிாபாாதது ஏஙகத தேவை யிலலை!

முயறசி வருததமிலலாமல எநத இலாபமும கிடைபப திலலை

## வைகறைத துயில் எழு

உனக்காகவும், உன குடும பததிறகாகவும், உன நாட்டிற காகவும, உன் கருணையுளள அரசருக்காகவும நீ எவவள வோ காரியஙகளைச செயய வேண்டியிருககுமபோது, வை கறைபபகல எட்டிபபாாபபதற குள் கண் விழிதது எழுநதுவிடு சூரியன கீழே குனிநது உன னைப் பாாதது 'இதோ ஒரு அற பன் கிடககிறான' என்று சொல லும்படி உறஙகாதே

முனனதாகப் படுததுறஙகி முனனதாகக கணவிழிதது எழ வேணடும—அது மனிதனை ஆரோககிய வானாகவும செல வநதனாகவும புததிசாலியாக வும ஆககுகிறது

தூககததிலிருநது நேரங கழிதது எழுநதிருபபவன நாள முழுதும அதிகமாக ஓடியாடி அலையவேணடும, இரவான பிறகுங கூடத தன காரியததைத எட்டிப பிடிபபாரு என்பது என்பது மிக அபூாவமே!

தேவைககு அதிகமாக எவ வளவு நேரததை நாம தூககத தில செலவழிதது விடுகிறோம தூஙகும குளளநரி கோழிககுஞ சுகளைக கைபபறறு வதிலலை எனபதை மறநது விடுகிறோம.

புதைகுழியில போதுமான அளவு தூஙக நேரம இருக் கிறது!

## நேரததை வீணுக்குதல்

நீ வாழவை நேசிககிறாயா? அவவாறாயின நேரததை வீணாக் கித திரியாதே! ஏனெனில காலம என்ற பணடததால தான வாழவு உருவாககப பட்டிருககிறது!

எலலாவறறையும விட நேரநதான அதிவிலை மதிபபற றது என்றால், காலததை விரய மாககுவதுதான் மாபெரும ஊதாரிததனமாகும

இழநத நேரததை மீண்டும கணடெடுகக முடியாது!

இனறைபபத தினம இரண்டு நாளையததினஙகளுககுச சம மாகும

எதையாவது நீ நாளையத் தினம் செய்யவேண்டியிருந்தால் அதை இன்றையத்தினமே செய்துவிடு.

செய்வதை இன்றே செய்! ஏனெனில் நாளை உனக்கு எவ்வளவு இடையூறுகள் ஏற்படுமென்று உனக்குத் தெரியாது.

இன்னும் போதுமான அளவு நேரம் இருக்கிறது என்று நாம் சொல்லுவதானது கடைசியில் ஒரு சிறு அளவு நேரங்கூடப் போதாது என நிரூபித்துவிடும்.

ஆகவே, நாம் துள்ளி யெழுந்து செயல்படுவோமாக, எதையும் ஒரு குறிக்கோளுடனே செய்வோமாக.

## ஓய்வு

மனிதன் ஓய்வே எடுத்துக் கொள்ளக் கூடாதா என்று உங்களில் சிலர் கேட்கலாம் நண்பனே, பதில் சொல்லுகிறேன், கேள்.

நீ ஓய்வைச் சம்பாதிக்கக் கருது வாயானால் உன்னுடைய நேரத்தை நன்றாக உபயோகப் படுத்து.

ஒரு விநாடியையும் பற்றி உனக்கு நிச்சயமில்லாத போது ஒரு மணிநேரத்தை வீணாக விட்டெறிந்து விடாதே.

ஓய்வு என்பது ஏதாவது உபயோகமானதைச் செய்யும் நேரமாகும். இந்த ஓய்வைச் சீரான சுறுசுறுப்புள்ளவன் அடைவான், சோம்பேறி இதை அடைவதேயில்லை.

ஓய்வான வாழ்க்கை என்பதும் சோம்பேறித்தனமான வாழ்க்கை என்பதும் இரண்டு விஷயங்களாகும்.

## சோம்பல்

சோம்பலானது நோய்களைக் கொணர்ந்து ஆயுளைக் குறைத்து விடுகிறது.

சோம்பேறித் தனத்திலிருந்து சங்கடங்கள் தாவி எழுகின்றன, தேவையற்ற ஓய்விலிருந்து துயரமான பாடுகள் தாவி எழுகின்றன.

தொழில் சுறுசுறுப்பைவிடச் சோம்பேறித்தனம் உனக்கு அதிக சௌகரியமளிக்கும் என்று கற்பனை செய்கிறாயா? இல்லவே இல்லை!

## சோம்பேறி

நீ ஒரு வேலைக்காரனாயிருந்தால், உன்னைச் சோம்பேறி யென்று ஒரு நல்ல எஜமானன் திட்டுவதைக் கண்டு அவமானப் படமாட்டாயா? நீயே உனக்கு எஜமானனாயிருந்தால் உன் சோம்பேறித் தனத்தைக் கண்டு நீயே அவமானப்படு.

சோம்பேறிகள் உறங்கும் போது நீ ஆழமாக உழு, உனக்கு விற்பதற்கும் சேமிப்பதற்கும் நிறையத் தானியங்கள் கிடைக்கும்.

சோம்பல் எல்லா விஷயங்களையும் கடினமாக்குகிறது; சுறுசுறுப்போ எல்லாவற்றையும் சுலபமாக்குகிறது.

சோம்பேறித்தனம் மெல்ல யாத்திரை செய்யும்போது அவன் பின்னால் வறுமை வேகமாக ஓடிவந்து எட்டிப் பிடித்துக்கொள்ளுகிறது.

நாம சுறுசுறுபபாயிருநதால நாம பசிததலையவேணடிய யதேயிலலை

உனனால ஒரு புதையலையும கணடெடுககமுடியவிலலையெனறாலும, உன கருச சொததது எழுதிவைதது விடடுப போகப பணககார உறவினன எவனும இலலையெனறாலும கவலையுறாதே சீரான தொழில சுறுசுறுபபுதான நலலதிருஷடததுககுத தாயாக விளஙகுகிறது!

சுறுசுறுபபானவாகளுககுத தான கடவுள எலலாப பொருளகளையும அளளித தருகிறா

## தொழில சுறுசுறுபபு

தொழில சுறுசுறுபபானது தேயவுறச செயவதைவிடச சோமபேறிததனநதான துருமபைபபோல விரைவில அரிதது விடுகிறது, உபயோகபபடுததும சாவிதான எபபோதும பிரகாசமாய இருககிறது!

## தொழில

ஒரு தொழில உளளவனுககு ஒரு ஆஸதி ஸகிதி இருககிறது

உன தொழிலை நீ செலுதது, தொழில உனனைச செலுதத விடாதே!

நீ கருவிகளேநதி தொழில செயகிறாய எனறால, கைகளில கையுறைகள இலலாமல கருவிகளைக கையாளு கையுறைகளுககுள உளள பூனை எநத எலியையும பிடிபபதிலலை!

## செயல

சாகப்போகிறவன எதையும சுலபமாகச செயய முடியாது

செய்யவேணடியது ஏராளமாயிருககிறது, என்பது உணமைதான, ஒரு வேளை நீ பலஹீனமான கைகள படைததவனாயுமிருககலாம, ஆனால அநதக கைகளை உபயோகபபடுததும விஷயததில சீரான உறுதியுடனிரு, அதனால மாபெரும விளைவுகளைக காணபாய

சுறுசுறுபபுளளவாகளுககுப படிபபு, கவனமுளளவாகளுககு செலவம, துணிவு உளளவாகளுககுப பலம, பணபுளளவாகளுககுச சுவாககம

சீரமையான போககினால நாம குழபபமினறி அதிகமான காரியஙகளைச செயய முடியும

இரணடு புகைபோககிகளைக கடடுவது சுலபம, ஒனறில விறகிடடு எரியவைததுக கொணடிருபபதை விட

## விடாமுயறசி

இனறு தொழில தொலலைப படடால பிறபாடு அமோகமாய செழிததோஙகும எனபதை மறநது விடாதே

## அலட்சியம்

ஒரு சிறு அலடசியமே மாபெரும சஙகடஙகளை ஊடடி வளாதது விடககூடும

## கவனம்

மனிதனின சொநதக கவனநதான இலாபகரமானது

பிறரின கவனததை நமபி விடடுவிடுவதுதானபல தொழில களின நாசததிறகுக காரணமாகிறது

அறிவுத் தேவையைவிடக் கவனத்தேவைதான் நமக்கு அதிக நஷ்டங்களை உண்டாக்கு கிறது

குதிரையின் ஒரு மிதியா ணிக் குறையால் குதிரையின் மிதி கெட்டது, குதிரையின் மிதிக் குறையால் குதிரை கெட் டது, குதிரையின் குறையால் சாரதி கெட்டான், சாரதியின் குறையால் யுத்தம் கெட்டது, யுத்தத்தின் குறையால் சாம் ராஜ்யம் கெட்டது—எல்லாம் ஒரு குதிரையின் மிதியாணி யைக் கவனிக்காத கவனக் குறைவால் விளைந்தவை

## சுயமுயற்சி

தன் கையே தனக்கு உதவி என்பவர்களுக்கே கடவுள் உதவுகிறார்

உனக்கு ஒரு நம்பிக்கை யான வேலையாள் கிடைக்க வேண்டுமென்றால், அவன் உன் னைப்போல இருக்கவேண்டு மென்றால், நீயே உனக்குவேலை செய்துகொள்

சீரான போக்குள்ள நெச வாளி விசாலமான மூலத் துணி வைத்திருக்கிறான்

இந்த உலக விவகாரங்களில் மனிதர்கள் காப்பாற்றப்படு வது அவர்களின் வெறும் நம் பிக்கையினாலல்ல, அதன் தேவைக் குறைவினால்?

உன்னிடமுள்ள தொழி லாளர்களைக் கணகாணிக்காம லிருப்பதுதான்து அவர்களி டம் உனது பணப்பையைத் திறந்து கொடுத்து விட்டுப் போவதாகும்

எஜமானின் கண்ணானது அவனுடைய கைகளைவிட அதிக மாக வேலை செய்துவிட முடி யாது!

ஏர் உழவை நம்பி வாழ்ப வன் தானே தன் கையில் ஏர் பிடிக்கவேண்டும் அல்லது ஏரைச் செலுத்தச் செய்ய வேண்டும்

நம்முடைய தொழிலில் நாம் சீராகவும் நிலையாகவும் கவன மாகவும் இருக்கவேண்டும் நம் முடைய காரியங்களை நம் முடைய சொந்தக் கண்களா லேயே கணகாணிக்க வேண் டும் பிறரை அளவுக்கதிமாக நம்பி விடக்கூடாது

உன்னுடைய கடையை நீ பாதுகாத்தால், உன்னை உன் கடை பாதுகாக்கும்

## எழுத்தாளருக்கு

நீ எந்த விஷயத்தைப் பற்றி யாவது எழுத உட்கார்ந்தால், முன்னதாக அதைப்பற்றிச் சிந்திப்பதில் சில நாட்களைச் செலவிடு அந்த விஷயத்தைப் பற்றி உன்மனதில் வரும் எண் ணங்களையெல்லாம் சிறுசிறு குறிப்புகளாக எழுதிவைத்துக் கொள் இவ்வாறு சிந்தனை களைத் தொகுத்துக் கொண்ட தும் அவற்றில் பொருத்தமான வற்றைப்பொறுக்கி எதை முன் னதாக எழுதினால் வாசகர்கள் கவரும் என்பதை ஆராய்ந்து அதன் பிரகாரம் சிந்தனைகளை வரிசைக் கிரமப்படுத்திப் பிறகு எழுதத் தொடங்கு

'ஒரு நூலாசிரியனுக்கு மாபெரும் ஆனந்தம் தருவது,

அவனுடைய நூல்களிலிருந்து மற்ற நூலாசிரியர்களான கல விமான்கள் மதிப்புடன் மேற் கோள் காட்டுவதைக் காண் பதுதான், வேறெதுவும் அவ னுக்கு அவ்வளவு ஆனந்த மளிப்பதில்லை' என்று கேள் விப்பட்டிருக்கிறேன் ஆனால் அந்த ஆனந்தத்தை நான் அனு பவித்ததே இல்லை!

கடைசியில் என்னை மதிப் பிடுவதற்குச் சிறந்த நீதிபதி கள் பொது ஜனங்கள்தான் என்று தீர்மானித்தேன், ஏனெ னில் அவர்கள்தான் என்புத்த கங்களை வாங்குகிறார்கள்!

## செய்திப்பத்திரிகை

நான் செய்திப்பத்திரிகை நடத்தும்போது, மானக் கேடாய் எழுதுவது, தனிப்பட்ட முறையில் தாக்கி எழுதுவது முதலானவற்றை யெல்லாம் சாவ ஜாக்கிரதையாக நீக்கி விட்டேன் இப்படியெல்லாம் மானக்கேடாய் எழுதுவது சமீபகாலத்தில் நம தேசத் திற்கு ஏற்பட்டிருக்கும் மகா அவக்கேடாகும்

## ஆராய்ச்சி

மின்சாரத்தைப்பற்றிய என் ஆராய்ச்சிகள் ஒரு புறமிருந் தாலும் நம்முடைய மூக்கு களுக்கும் தாடிகளுக்கும் அடி யில் இன்னும் மின்னல் இடிகள் தொடர்ந்து விழுந்து கொண்டு தானிருக்கின்றன!

## முடிவு

## சமாதிசாஸனம்

[பெஞ்சமின் பிராங்ளின் தாம் இறந்து போனால் தம சமாதி சாசனத்தில் என்ன எழுதப்படவேண்டும் என் பதை முன்னதாகவே எழுதிவைத்து விட்டுப் போனார் அந்தச் சாசனம்:]

அச்சாளரான பெஞ்சமின் பிராங்ளினின் உடல், (பழைய புஸ்தகத்தின் மேலட்டையைப் போலவே, அதன் பொருளடக் கங்கள் நைந்து கிழிந்து போய், அதன் எழுத்துகளும் மெருகும் கிலமாகிக் கிடப்பதைப்போல) இங்கே கிடக்கிறது — புழுக் களுக்கு உணவாக! ஆனால் உழைப்பு என்றுமே அழிந்து போகாது, ஏனெனில் அது மறுபடியும் நூலாசிரியனால் திருத்தி எழுதப்பட்டு இன்னும் அழகான புதிய பதிப்பாக வெளிவரும் (என்பது அவரது நம்பிக்கை)

[கி பி 1728ல் எழுதப்பட்டது]

# கலைச் சொற்களைப் பற்றி

[ இந்த நூலில் கையாளப்பட்டிருக்கும் கலைச் சொற்களும் அவற்றிற்கு நேரான ஆங்கிலச் சொற்களும் கீழே தரப்பட்டுள்ளன:]

| | |
|---|---|
| அச்சகம் | Printing House |
| அச்சிடும் கலை | The Art of Printing |
| அச்சுக் கோர்த்தல் | Type-composing |
| அச்சுத் தொழில் | Printing business |
| அடிமை ஒழிப்பு | Abolition of Slavery |
| அதிகாரிகள் | Authorities |
| அயல்நாட்டுத் தூதுவர், (ஸ்தானிகர்) | Ambassador |
| அரசாங்க இலாகா | State Department |
| அரசாங்க மாளிகை | State House |
| அரசியல் அமைப்பு | Constitution |
| அபூர்வமான சரக்கு | Rare thing |
| அமெரிக்கப் புரட்சி | American Revolution |
| அமெரிக்கத் தத்துவஞான சங்கம்— | American Philosophical Society |
| அமெரிக்க யாத்திரிகர்கள் | American Tourists |
| அறிக்கைகள் | Reports |
| அறியாமை | Ignorance |
| அநாமதேயம் | Anonymous |
| அன்னியர் | Stranger |
| ஆங்கிலேய முடியரசு | The English Crown |
| ஆணையாளர் | Commissioner |
| ஆபத் சகாயநிதி | Insurance |
| இடிதாங்கித் தடி | Lightning rod |
| இலக்கிய வட்டாரங்கள் | Literary Circles |
| இலவசப் பள்ளிகள் | Free schools |
| இரும்புக் கதிர் | Iron spindle |
| இருப்பு | Stock |
| இருள்நீலம் | Dark blue |
| இறைச்சி | Meat |

| | |
|---|---|
| உஷ்ணமானினி | Thermometer |
| உடன்படிக்கை | Treaty |
| உதவாக்கரைப் பிள்ளை | Prodigal son |
| உலோகப் பொருள்கள் | Metals |
| உள்நாட்டுத் தற்காப்பு | Home Defence |
| உள்ளூர் செய்திகள் | Local News |
| எண் கணிதம் | Arithmetic |
| எரி சாதனம் | Fuel |
| எழுத்தாளர் | Writer |
| ஏழை ரிச்சர்டின் பஞ்சாங்கம் | Poor Richard's Almanac |
| ஐக்கிய நாடுகள் (ஐக்கிய அமெரிக்கா) | United States |
| ஒப்பந்தம் | Contract |
| ஒப்பாரிகள் | Eulogies |
| கட்டுரை, வியாசம் | Article |
| கந்தக வாசனை | Sulpharous smell |
| கலங்கரை விளக்கம் | Light house |
| கலைக் கழகம் | Academy |
| கற்றுக்குட்டி (பயிற்சியாளன்) | Apprentice |
| கனவு மூர்ச்சை | Night mare |
| காகித நாணயம் | Paper money |
| காய்கறி உணவு | Vegetable diet |
| கிருமி | Germ |
| குடாக்கடல் நீரோடை | Gult-Stream |
| குடிப்படை, மக்கள் சேனை | Militia |
| குடியேற்ற நாடு, காலனி | Coloney |
| குழுக்கள் | Companies |
| கேளிக்கை ஸ்தலங்கள் | Places of Amusements |
| கையெழுத்துப் பிரதி | Manuscript |
| கொள்கை | Principle |
| கோமகன் | Duke |
| கௌரவப் பட்டங்கள் | Honorary degrees |
| சட்டசபை, பேரவை | Assembly |
| சதுர விளக்கு | Square-Lamp |
| சந்துவாத நோய் | Gout |
| சந்தைத் தெரு | Market street |
| சபை விவாதங்கள் | Debates |
| சமாதானத் தூது | Peace Mission |
| சம்பிரதாயம் | Convention |
| சர்வகலாசாலை | University |
| சர்வாதிகாரிகள் | Dictators |

| | |
|---|---|
| சாப்பாட்டு விடுதி | Boarding House |
| சிலாசத்து | Gypsum |
| சிலாசாஸனம் | Inscription |
| சுதந்திர மனிதன் | Free Man |
| சுதந்திரப் பிரகடனம் | Declaration of Independence |
| சுதந்திரம், சமத்துவம், சகோதரத்வம் | Liberty, Equality and Fraternity |
| சுயேட்சை உணர்ச்சி | Independent spirit |
| செத்த தபால் இலாகா | Dead-Letter-Office |
| செயற்கை உரம் | Artificial fertilizer |
| செய்திப் பத்திரிகைகள் | News papers |
| சேமிப்புக் கிடங்கு | Store-room |
| சோக நாடகம் | Tragedy |
| ஸ்தாபனம் | Institution |
| ஸ்தாபகர் | Founder |
| ஜடவஸ்து | Matter |
| ஞான ஸ்நானம் | Baptism |
| தண்ணீர் முனை | Water-front |
| தஸ்தாவேஜுகள் | Documents |
| தத்துவஞானி | Philosopher |
| தபால் தலை | Stamp |
| தபால் திட்டம் | Postal system |
| தபால் பட்டுவாடா | Mail delivery |
| தலையங்கம் | Editorial |
| தனிப்பட்ட தாக்குதல்கள் | Personal attacks |
| தீர்மானங்கள் | Resolutions |
| துண்டுப் பிரசுரம் | Pamphlet |
| தூதுக்கோஷ்டி | Delegation |
| தொழில், வாணிபம் | Trade |
| தோட்ட நடவு | Planting the garden |
| தோணித்துறை | Wharf |
| தோற்றம் | Phenomenon |
| நகர எல்லைகள் | City limits |
| நகரசபை | City council |
| நகரசுத்தி இலாகா | Sanitation Department |
| நகரத் தலைவர் | Alderman |
| நகரத்தார் | Burges |
| பெருநகராண்மைக் கழகம் | Corporation |
| நகரப் பிதாக்கள் | City fathers |
| நடைபாதை | Foot-walk |
| நடுநிலைமை | Neutral |

